# நெல்சன் மண்டேலா

ஜினி ஹோலண்ட்

படங்கள்- மைக் வைட்

தமிழில்- கிருஷ்ணன்



1994 ல் நெல்சன் மண்டேலா தென் ஆப்பிரிக்காவின் முதல் கறுப்பின ஜனாதிபதியானார். இதற்கு முன் தன் நாட்டின் சுதந்திரத்துக்காக பல போராட்டங்களை முன்னெடுத்து நடத்தியுள்ளார். அதன் காரணத்தினால் பல துயரங்களையும் அனுபவித்து உள்ளார்.

அவர் பழங்குடி தெம்பு வின் தளபதியின் மகனும். அந்த குடியின் ராஜாவின் கொள்ளு பேரனுமாவார். ஆனால் மண்டேலா பிறக்கும் அச்சமயம் அவருடைய நாட்டை வெள்ளையர்கள் ஆண்டு வந்தனர்.



தென் அப்பிரிக்காவிலுள்ள அணைத்து விளை நிலங்களையும் வெள்ளையர்கள் கையகப்படுத்திக் கொண்டுவிட்டனர்.இது ஆப்ரிக்காவின் பூர்வ குடி மக்களை ஏழ்மையில் தள்ளியது.

எல்லா சட்டங்களையும் வெள்ளையர்களுக்கு சாதகமாகவே இயற்றினர். அது பூர்வ குடி மக்களுக்கு எதிராகவே இருந்தது.மண்டேலா சுமார் முப்பதாண்டு காலம் சிறைவாசம் அனுபவிக்க வேண்டியிருந்தது. இது அவரின் சுதந்திர போரட்டாத்திற்க்கான பரிசு .





மண்டேலா அவரது பால்ய காலத்தில் இரவில் ஒரு வட்ட அறையிலேயே படுத்து உறங்குவார். தனது பெற்றோர், மூன்று சகோதிரிகளின் அருகிலேயே படுப்பார். ஒவ்வொருவரும் அவரவர் பின்னிய படுக்கையிலேயே உறங்குவார்கள்.

அவர் அம்மாவிடம் மூன்று பாரம்பரிய குடிசைகள் இருந்தது. அதில் ஒன்று சமைப்பத்திற்காக, இன்னோன்று உறங்குவதற்காக, மற்றொன்று தானியங்கள் சேமிப்பு கிடங்காக இருந்தது.

அந்த குடியில் உள்ள எல்லா திருமணமான பெண்களை போலவே அவளிடம் கொஞ்சம் கால்- நடைகளும் ஒரு தோட்டமும் இருந்தது. அதிலிருந்தே அவள் குழந்தைகளுக்கு உணவு அளிக்க முடிந்தது.

அவர்களுடைய முக்கிய உணவு மீலிஸ், அது ஒரு வகையான சோளமாகும்.
நெல்சனின் அம்மா அதை உமியில் இடித்து மாவாக்கி விடுவார். பின்னர் அதை அடுப்பில் ரொட்டி போல சுட வைத்து உண்பார்கள். நெல்சனும் அவனுடைய சகோதரிகளும் இதற்கு உதவியாக இருப்பார்கள். நெல்சன் ஆடு மாடுகளையும் மேய்த்து தன் அம்மாவிற்கு உதவியாக இருந்தான்.





சில நேரங்களில் நெல்சனும் அவனது நண்பர்களும் வேட்டைக்கு செல்வார்கள். ஏதாவது ஒரு பறவை பிடிபட்டது என்றால் அங்கேயே அதை உரித்து சமைத்து உண்டு  விடுவார்கள். அது ஒரு கவலை இல்லா கனாக் - காலம். நெல்சனின் பத்தாவது வயதில் அவர் தந்தை இறந்தார்.

இதற்கு பின் நெல்சன் தனது உறவினர் வீட்டில் தங்கியிருந்தான், அவர் பெயர்  ஜோகிந்தபா, அவருடைய குடியின் தலைவருமாவார். அவர் நெல்சனை நன்றாக கவனித்து கொண்டார். அவனை பள்ளிக்கும் அனுப்பினார். ஆனால் நெல்சன் கற்று கொண்ட பாடங்கள் பள்ளி கூடத்திலிருந்து அவனுக்கு கிடைக்கவில்லை மாறாக அவன் சமூகத்தினிடமிருந்தே கிடைத்தது. இளைஞர்கள் அனைவரும் பெரியவர்கள் பேசிக்கொள்வதை உன்னிப்பாக கவனித்தார்கள். மற்ற குடியிலிருந்து தலைவர்கள் ஜோகிந்தபா வைக் காண வந்தார்கள்.





இதில் பூர்வ குடிக்களின்  மூத்த தலைவர் ஸ்வெளிபாங்க்லே ஜோயி ஆவார். அவர் ஜோகிந்தபா விடம் தம் குடிக்கள் எப்படி பிரிட்டிஷாரை எதிர்த்து சண்டையிட்டனர் என்பதையும், தமக்குளேயே  ஒற்றுமை இல்லாததையும் பேசினார். நெல்சன் இதையெல்லாம் கேட்டுக்கொண்டிருப்பான். தம் குடி மக்களிடம் ஏன் இப்போது நிலம் இல்லாமல் போனது என்பதை அவன் அறிந்து கொண்டான். தம் இன மக்களுக்கு நல்ல வருங்காலம் அமைய வேண்டுமெனில்   தான் கடினமாக உழைக்க வேண்டும் என்பதை புரிந்து கொண்டான்



1941ல் நெல்சன் ஜோஹன்னஸ்பர்க் சென்று வாழ ஆரம்பித்தான். அது தென் ஆப்ரிக்காவிலேயே பெரிய நகரமாகும். அவன் தங்க சுரங்க காவலாளியாக வேலை செய்தான். தம் குடியிலிருந்தும் மக்களிடருந்தும் எத்தனை வித்தியாசமான வாழ்க்கை என்பதை உணர்ந்தான். வெள்ளையர்கள் மட்டும் ஆண்ட நேஷனலிஸ்ட் அரசு இன வேறுபாட்டை கடுமையாக கடைப்பிடித்தது. அதற்கு அப்பார் தீட் என்று பெயர். வெள்ளையர்களே நகரத்தில் உள்ள பெரிய வீடுகளில் வாழ்ந்தனர். அவர்கள் எல்லோர்க்கும் கருப்பு வேலைக்காரர்கள் இருந்தனர்.



அந்நாட்டின் கறுப்பின மக்கள் தங்கள் சொந்த நகரத்திற்குள் வருவதற்கு சிறப்பு அனுமதி பெற்றே வர முடியும். அவர்கள் அனைவருமே கருப்பினர்  மட்டும் வாழும் நகரத்திலேயே வாழ முடியும். அவர்கள் வாழ்ந்த இடங்கள் வறண்ட பூமியாகவே இருந்தது.  பயிர் செய்வது மிகவும் கஷ்டம். தண்ணீர் , மின்சாரம், தொலைபேசி என்று எந்த வசதியும் கிடையாது. கறுப்பின மக்களுக்கு  நிலம், ஓட்டுரிமை என எதுவும் கிடையாது. இதுவே நிதர்சன உண்மையாக இருந்தது. ஆனால் ஒரு வெள்ளை குடிமகனுக்கு 6 அல்லது ஏழு கறுப்பின மக்கள் வேலைக்காரர்களாக இருந்த தேசமது.

நகரத்திற்கு வெளியே மிக குறைந்த வேலைகளே இருந்தது. சிறப்பு அனுமதி பெற்ற கறுப்பின மக்கள் தங்கள் வேலைகள் முடிந்தவுடன் மாலை சூரியன் அஸ்தமனத்திற்குள் நகரத்தை விட்டு வெளியேற வேண்டும். இது அரசு கட்டளை ஆகும். இவர்கள் கூட்டம் நிறைந்த பேருந்துகளிலும், ரயிலிலும் பல நேரம் பயணித்தே தம் வீடுகளை அடைவர். மறு நாள் காலை முன்னரே எழுந்து வேலைக்கு திரும்பி நகருக்கு ஓடி வர வேண்டும். அவர்களுடைய சம்பளம் மிகவும் குறைவாகவே இருந்தது, பெரும்பாலோர் பசியிலேயே வாழ்க்கையை ஓட்டினர்.



நெல்சன் மண்டேலா விட்-வட்டர்சன்ட் பல்கலைக்கழகத்தில் தனது கல்வியை தொடர்ந்தார். அங்கு எல்லா இன மக்களும் ஒன்றாக படிப்பதை கண்டு ஆச்சரியப்பட்டார். அங்கு புதியதோர் தென் ஆப்பிரிக்காவை உருவாக் குவதை பற்றியான பேச்சு எங்கும் நிறைந்திருந்தது. வெள்ளையர் பெரும்பாலும் தாங்களே நாட்டை ஆள வேண்டும் என்று கோரினர். ஆனால் கறுப்பின மக்களோ தம் சொந்த நாட்டில் தங்களுக்கு சம உரிமை கிடைக்க வேண்டும் என்பதே போராட்டங்களின் வெற்றியாக இருக்கும் என்று கூறினர்.



தன் வாழ்க்கையை சமூக நீதி மற்றும் சமத்துவம் நிலை நாட்டுவதிலேயே அர்ப்பணிப்பதென்று முடிவு செய்தார் நெல்சன் மண்டேலா.

1944 ல் தனது 26 ஆம் வயதில் ஆஃப்ரிக்கன் நேஷனல் காங்கிரெஸில் சேர்ந்தார்.
எவேலின் என்னும் பெண்மணியை மணந்தார்.



1947ல் ஆஃப்ரிக்கன் நேஷனல் காங்கிரெஸின் இளைஞர் அணித் தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்டார். 1951ல் அவர் தலைமையில் வெள்ளையர் அரசாங்கத்தை எதிர்த்து வேலை நிறுத்தம் செய்தனர். இதில் பல ஆப்ரிக்க மக்களும், இந்திய தொழிலார்களும் கலந்து கொண்டனர்.



1951ல் வெள்ளையர் அரசாங்கத்தின் அடக்குமுறை சட்டங்களை கேள்வி கேட்டத்துக்கும், எதிர்த்தத்துக்கும் அவர் கைது செய்யப்பட்டார். ஆனால் அவரின் போராட்டம் அஹிம்சை வழியில் இருந்ததால் வெள்ளையர் போலீஸார் அவரை விடுவிக்க வேண்டியதாயிற்று.

வெள்ளையர் அடக்கு முறை சட்டங்களை எதிர்த்து இரு இன மக்களுக்கும் இடேயே கடும் சண்டை உண்டானது. இதில் வெள்ளையரும், கறுப்பின மக்கள் இரு பிரிவிலும் பல உயிர்கள் பலியாகியது. இச்சமயத்தில் அரசாங்கம் மண்டேலா மக்களிடம் சட்ட சீர்திருத்தங்களை பற்றி மக்களிடம் பேசவே தடை செய்தது. மக்களின் போரட்டத்திற்கு அது தோல்வி தரும் காலமாகவே இருந்தது. ஆனாலும் மண்டேலா நம்பிக்கை இழக்கவில்லை. தொடர்ந்து அவர் சம உரிமைக்கான போராட்டத்தை நடத்தி கொண்டிருந்தார்.
1956ல் தேச விரோத சட்டத்தால் மண்டேலாவையும் அவரோடு சேர்ந்து 155 பேரையும் வெள்ளையர் கைது செய்தனர். மண்டேலாவுக்கும் மற்ற 29 பேருக்கும் மரண தண்டனை கொடுக்க வேண்டும் என்று அரசாங்கம் வேண்டுகோள் வைத்தது. ஆனால் இந்த வழக்கை விசாரித்த நீதிபதி அவர்கள் எல்லோரையும் நிரபராதிகள் என அறிவித்து விடுவித்தார்.





அவரின் முதல் திருமணம் முறிந்தது. அவர் வின்னி மடிகிஸிலா என்பவரை மணந்தார். மண்டேலாவின் சுதந்திர மற்றும் சமூக நீதி போராட்டத்தில் வின்னியும்  இனைந்து போராட கை சேர்ந்து கொண்டார்.



1960 ல் ஒரு கொடூர சம்பவம் ஷார்ப் வில்லே எனும் ஒரு நகரத்தில் நடந்தது. கறுப்பின மக்கள் நிற வெறி சட்டத்திற்கு எதிரான போராட்டம் நடத்தினர். வெள்ளை போலிஸார் அவர்களை சுட்டு தள்ளினர். அதில் 69 பேர் கொல்லப்பட்டனர், மேலும் 180 ஆண்கள், பெண்கள் என எல்லோரும் காயம் அடைந்தனர்.

இச்சம்பவத்திற்கு பின் அரசாங்கம் ஆப்ரிக்க நேஷனல் காங்கிரஸிற்கு தடை விதித்தது. மண்டேலாவும் சிறையில் அடைக்க பட்டார். ஷார்ப் வில்லே போராட்டத்தில் கலந்து கொண்ட மக்களுக்கு தனது ஆதரவை கொடுத்ததிற்கு அரசு  தண்டனை கொடுத்தது. தண்டனை காலம் முடிந்தபின் மண்டேலாவும் அவர் நண்பர்களும் சேர்ந்து ஒரு குழுவை உருவாக்கினர். அதன் பின் ஒரு புது போராட்ட உத்தியை தொடங்கினர். அரசாங்க கட்டிடங்களை குண்டு வைத்து தகர்த்தனர், மக்கள் உயிர் சேதாரம் ஆகாமல் பார்த்து கொண்டனர். எனினும் அது ஒரு அமைதி போராட்டமாக இல்லை.



மண்டேலா போலிஸிடமிருந்து மறைந்து வாழ வேண்டியதாயிற்று. 1962ல் அவர் திரும்ப கைது செய்தனர். இம்முறை 5 வருட கால கடும் சிறை தண்டனை விதித்தனர். பிரிட்டோரியா சிறையில் அடைக்கப்பட்டார். மீண்டும் இந்த வழக்கு நீதிமன்றம் சென்ற போது அவருக்கு ஆயுள் தண்டனை விதிக்கப்பட்டது.





1964ல் ராபன் தீவில் உள்ள சிறையில் அடைக்கப்பட்டார். அவர் வாழப்போகும் சிறையை அவரை வைத்தே கட்ட வைத்தனர். சிறையிலேயே இரவும் பகலும் இருக்க வைத்தனர். வெளியே வர அனுமதித்த போது கோணி பைகளை தைக்கும் வேலையை கொடுத்தனர். வேலைக்கு நடுவில் ஒருத்தருக்கு ஒருவர் பேசி கொண்டால் ஒரு வேலை சாப்பாட்டிற்கு தடை. இப்படி சிறை வாசம் கடுமையாக இருந்தது.

நெல்சன் மண்டேலா சிறையில் இருந்த கால கட்டத்தில் சமூகத்தில் பல போராட்டங்கள் வெடித்து கொண்டிருந்தது. நிறைய போராட்டக்காரர்கள் கொல்லப்பட்டனர் அல்லது சிறையில் அடைக்கப்பட்டனர்.
உலகெங்கிலும் இருந்து மண்டேலாவை சிறையில் வைத்திருப்பதற்கு எதிர்ப்பு வலு பெற்றது. மற்ற நாடுகளிலிருந்தும் மக்கள் நிற வெறி கொள்கையை (அபார்த்திடு) உயர்த்தி பிடிக்கும் தென் ஆப்ரிக்காவின் வெள்ளையர் அரசை எதிர்த்தனர். அவர்கள் அந்த அரசுக்கு அழுத்தத்தையும் தந்தனர்.






நிற வெறி கொள்கையினால் தென் ஆப்பிரிக்காவை எல்லா விளையாட்டு ஒலிம்பிக் உட்பட மற்ற கலாச்சார நிகழ்விலிருந்தும் மற்ற நாடுகள் புறக்கணித்தது. 1986ல் அமெரிக்க காங்கிரஸ் தென் ஆஃப்ரிக்க விமானங்களை தம் நாட்டில் தரையிறங்க விட கூடாது என்று சட்டம் கொண்டு வந்தது. அனைத்து பொருட்கள் மீதும் தடை விதித்தது. மண்டேலாவின் 70ஆம் வயது பிறந்த நாளன்று ஒரு பெரிய இசை விழா நடந்தது. அது உலகத்தில் உள்ள எல்லா நாடுகளுக்கும் ஒளிபரப்ப பட்டது . தென் ஆப்ரிக்கா அரசிங்கம் இதற்கு மேலும் மற்ற நாடுகளின் அழுத்தத்தை நிராகரிக்க முடியாத ஒரு கட்டத்திற்கு வந்தது.



1989ல் டீ கிளார்க் என்பவர் ஜனாதிபதியாக தேர்ந்து எடுக்கப்பட்டார். அவர் தென் ஆப்பிரிக்காவை எல்லோருக்கும் சம உரிமை உள்ள நாடாக மாற்றுவதற்கான முயற்சிகளை மேற்கொண்டார். ஒரு நேரலை தொலைக்காட்சி நிகழ்வில் மண்டேலாவை விடுவிப்பதாக அறிவித்தார்.

ஞாற்றுக்கிழமை பெப்ரவரி 11 நெல்சன் மண்டேலா சிறையிலிருந்து வெளியே வந்தார். அப்போது 71 ஆம் வயதாகிய அவர் 10,000 நாட்கள் சிறையில் கழித்திருந்தார்.



சிறைச்சாலைக்கு வெளியில் அவர் இத்தனை நாட்களும் தனக்கு துணை நின்ற தன் மனைவி வின்னி யோடு இணைந்தார். உலகில் உள்ள அனைத்து மக்களும் இதை கண்டு பேரானந்தம் அடைந்தனர். மண்டேலாவின் விடுதலை அரசின் நிற வெறி கொள்கையும் இத்தோடு முடிந்தது என்று தென் ஆப்பிரிக்கா மக்களும் தெருவில் இறங்கி ஆடி மகிழ்ந்தனர்.

டீ க்ளெர்க்கும், மண்டேலாவும் இணைந்து ஒரு சுதந்திர தென் ஆஃப்ரிக்காவை உருவாக்க வேலை செய்தனர். 1994ல் நெல்சன் மண்டேலா அந்நாட்டின் ஜனாதிபதி தேர்தலுக்கு போட்டியிட்டார். லட்சக்கணக்கான மக்கள் தங்கள் ஓட்டுரிமையை நீண்ட வரிசியில் நின்று செலுத்தினர். இதுவே அவர்களின் ஓட்டளிக்கும் முதல் தேர்தலாகும். அப்போட்டியில் மண்டேலா வெற்றி பெற்று ஜனாதிபதியானார். டீ க்ளெர்க் துணை ஜனாதிபதியானார்.





மண்டேலா ஜனாதிபதியான பிறகு பல நாடு தலைவர்களை சந்தித்தார். தன் நாட்டு மக்களிடையே சமூக உறவும் அமைதியும் நிலவுவதற்கு உழைத்தார். நிற வெறியில்லாத ஒரு சமூகம் அமைய வேண்டும் என்றே ஆசைப்பட்டார். இப்போது தென் ஆப்ரிக்காவில் எல்லோருக்கும் ஓட்டுரிமை உண்டு , யார் வேண்டுமானாலும், எங்குவேனாலும் சொத்து வாங்கி கொள்ளலாம், எங்குவேணாலும்  தங்கள் ஆசைப்படி செல்லலாம். வெள்ளையர்களுக்கு சரிசமமான சம்பளதிற்கு வேலைக்கும் செல்லலாம். உலகில் தென் ஆப்பிரிக்கா ஒரு சுதந்திர ஜனநாயக நாடாகும்.

முக்கிய வருடங்கள்

1918 தென்கிழக்கு தென் ஆப்ரிக்காவில் ட்ரான்ஸ்கிய் என்னும் ஊரில் பிறந்தார்

1942 தென் ஆஃப்ரிக்க பல்கலை கழகத்தில் சட்ட முதுகலை பட்டம் பெற்றார்

1944 ஆப்பிரிக்க நேஷனல் காங்கிரஸில் சேர்ந்தார்

1956 தேச விரோத வழக்கு மண்டேலா மற்றும் 155 பேர் மீதும் தொடரப்பட்டது

1958 விண்ப்பிரேட்  மடிகிஸிலா வை மணந்தார்

1960 ஷார்ப் வில்லே துப்பாக்கி சூட்டு நடந்தது. ஆப்பிரிக்க நேஷனல் காங்கிரஸ் தடை செய்யப்பட்டது. மீண்டும் சிறையில் அடைக்கப்பட்டார்

1964 அவர் மீது ஆயுள் தண்டனை விதிப்பட்டது

1990 சிறையிலிருந்து விடுவிக்கப்பட்டார்

1991 ஆப்பிரிக்க நேஷனல் காங்கிரஸ் தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்டார்

1994 நாட்டின் ஜனாதிபதியாக தேர்ந்தெடுக்கப்பட்டார்